பெய்யெனப் பெய்யும் பெருமழை யென்றவப்
பொய்யில் புலவன் பொருளுரை தேறாய்
பிசியு நொடியும் பிறர்வாய்க் கேட்டு
விசிபிணி முழவின் விழாக்கோள் விரும்பிக்
கடவுட் பேணற் கடவியை யாகலின்
மடவர லேவ மழையும்பெய் யாது
நிறையுடைப் பெண்டிர் தம்மே போலப்
பிறா நெஞ்சு சுடூஉம் பெற்றியு மில்லை'

மணிமேகலையும்,

'சோதிப் பதியன்றி வேறொரு தெய்வந் தொழுதலில்லை [தில்லை
யோதிற் பிறரென வசச முறும லுயிர்களெல்லா
நீதிப் புதல்வா களாயின வாதலி னிகொள்கற்புப்
பேதிப்ப தன்றுகண டாய்குன்றை வாழும் பெரி யம்மையே'

எனப் பெரிய நாயகியம்மை கலித்துறையுங் கற்பியல் விளக்குதல் காண்க

விடை: (1) மனைவி உடற்றொடர்புடைய கணவன் சென்றவழிச் சேறலும், அவன் சொல்வழி நிற்றலும் இன்னோரன்ன பிறவும் பொதுவற (சாமாந்யதர்ம)மெனவும், உயிர்த்தொடர் புடைமையின் 'ஆத்மநாயகன்' எனப் பெறுகின்ற கணவனாகிய பரமன்பால் நேயம் வைத்து அவன்மாட்டு மனமொழிமெய்களைச் செலுத்தல் சிறப்பற (விசேஷ தர்ம)மெனவும் ஆன்றோர் பகர்வர்.

வேதாகம முதலியன யாவும் 'ஆத்மநாயகன்' என்புழி, ஆண்பாலார்க் கென்றுதல் பெண்பாலார்க்

கென்றுதல் விதவாமையானும், 'ஸ்திரீபிராயம் இதர ஜகத்' என்பதற்கிணங்க ஆசாரியர்களும் தம்மை மகளிராக வைத்துப் பரமபதியை நாயகனைப் பாவித்து அனுபவித்தலானும், ஆத்ம நாயகனை வழிபடுதலின் ஆண், பெண் என்னும் வியவஸ்தை யின்றென்க ஆகலின், உயிர்த்தொடர்புடைய நாயகனை அம்மையார் வழிபடுதலிற் குறை யென்னும்?

(2) முற்பிறப்புக்கள் பலவற்றிற் செய்த புண்ணிய முதிர்ச்சியான மனம் பரமேசுவரன் திருவடிக்கண் இலயிக்கப் பெற்றார்க்கு விதித்தன செய்தலும் விலக்கியன ஒழிதலும் வேண்டா; அவர் செய்தவை யெல்லாந் தவமாம்.

'அரனடிக் கன்பர் செய்த பாவமும் மறம தாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி
நரரினிற் பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே'

என்றதூஉம் அப் பொருளையா மென்க.

எனவே, அத்தகைய புண்ணிய முதிர்ச்சியுடைய அம்மையார் விதித்தன செய்யாமையுந் தவ மாயிற்றாம்.

(3) தம்து நாயகன் சைவப்பற் றுடையானுமிருப்புழி அவற்கு வேண்டிய வெல்லாஞ் செய்த அம்மையார் அவன சமணப் படுகுழியின் வீழ்ந்தமை கண்டு வழித் தாமும் அதன்கண் வீழின் அவன் எடுப்பாரற்றுப் போவ னென்னும் இரக்கத்தால் தாம் வீழாது நின்று அவனை அப படுகுழியினின்றும் எடுத்தற்கு வேண்டிய எல்லா முயற்சியுஞ் செய்தெடுத்தமையின் அம்மையார்பாற் குறை யாண்டைய தென்க.

சேக்கிழார் பெருமான் சேவடி வெல்க.